# கார்ல் மார்க்ஸ்-ன் "துக்கம்-நகைப்பு"-விளக்கம்.

"நெப்போலியனின் வெற்றியால் ஐரோப்பாவில் தோற்ற நாடுகளில் துக்கம், பிரெஞ்சுப் புரட்சியில் நெப்போலியனின் பேரன் ***18th Brumaire*** கொல்லப்பட்டதும், நெப்போலியனின் வெங்கல சிலை மக்களால் சுக்குநூறாய் உடைக்கப்பட்டதும் நகைப்பு."

"கொரனா மருந்து இல்லாதவரை பெரும் துக்கம், மருந்து வந்த பிறகோ அது நகைப்பாகும்."

"ஸ்பார்டகஸ் புரட்சி தோல்விக்குப்பின் ரோம் நகரத்தில் அடிமைகளை உயிருடன் சிலுவையில் அறையும் வழக்கம் நகைப்பாகி ஐரோப்பாவில் ***ஜெருசலத்தில் எகிப்திய அடிமைத்தனத்தை அழித்த கிறிஸ்தவம்*** ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்தவமாக மக்கள் மனதில் நிலைகொண்டது."

"பால் திரிவதைப்போல் ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்தவம் இறந்தபின் ஐந்தாம் திசையில் சொர்கம் என்பதை மட்டும் தென் அமெரிக்க மக்கள் மனதில் விதைத்தது. ஐரோப்பியர்கள் அடிமைத்தனத்தை அங்கு ஏற்படுத்தி தங்கம், வைரம், விவசாய விளைச்சலைக் கொள்ளையடித்தனர். இது நகைப்பானதால் கத்தோலிக்கத்தின் மீது கம்யுன் என்ற சைமன் பொலிவரின் புரட்சி சம்பவமானது."

"ஐரோப்பிய ருஷ்யாவில் ஜார் மன்னனின் சர்வாதிகாரம் இஸ்லாமிய பிராந்தியங்களான கஜக்ஸ்தான், உஸ்பெஸ்கிஸ்தான், இன்னும் பல தேசிய இன பகுதிகளை அடிமைகளாகவும், ருஷ்ய-ஜார்ஜிய மக்களை வறுமையிலும் துன்புறுத்தியதை கத்தோலிக்கக் கிறிஸ்தவமும், இஸ்லாமும் ஏனென்று வினவாததால் நகைப்பிற்காகி எதன் மீதும் அமராமல் லெனினின் நாத்திக கம்யுன் புரட்சி சம்பவமானது. வறுமை-துன்பம் நீக்கி மகிழ்சியை அளித்த கம்யுன் தன் நிறுவனமாக்கல் குறையால் நகைப்பிற்காகி ஒன்றுமில்லா (வறுமை-துன்பம்-மதம்) நிலையில்.. மக்கள் மனதில் மீண்டும் துளிராக உள்ளது."

"புத்தர், கிறிஸ்து பிறப்பிற்கு முன் ***Nothing-Something-again Nothing*** என்ற லாவோசி-ன் 5000 வார்த்தைகள்-தவோ மத தத்துவம் சீனாவில் மக்களை மகிழ்வுடன் ஆட்சி புரிய மன்னரிடம் வழங்கப் பட்டது. அது மக்கள் மதமாயிற்று. கன்ஃபூசிய அரசமத இடையூறினால் லாவோசி மனம் வெறுத்து சீனத்தை விட்டு எருமையில் பயணம் செய்து மேற்குவாசல் வழியே வெளியேறினாலும் சீன மக்களிடம் தவோ இன்னும் ஏதோ ஓர் வடிவில் மக்கள் மதமாய் வாழ்கிறது. தவோ தத்துவ "ஒன்றுமில்லைப்படி" மாவோவை லாவோசியாகத்தான் சீன மக்கள் உணர்கிறார்கள். எனவே அங்கு லாவோசி-மாவோ சிலைகள் மரியாதைக்குடையதாய் உள்ளது."

"சீனம்.. ஒரே இனக்குழு.. அதனால் அதன் கலாச்சாரம் அங்கு உருக்குலைக்கப் படவில்லை. இந்தியாவோ பல இனக்குழுக்கள் வாழும் நாடு. 4000 ஆண்டுகளாக ஒன்றின் பழக்கம் மற்றதின் மீதும், அந்நிய கலாச்சாரம் அக்டோபஸாக படர்ந்தும் அலங்கோலப்படுத்திவிட்டது. சிந்து, மேற்கு-கிழக்கு கங்கை, பிரமபுத்திரா, நர்மதை, கிருஷ்ணா, காவேரி கலாச்சாரமாகத்தான் இந்திய வரலாற்றை துவக்க முடியும். அப்படி ஓர் வரலாற்றை யாரும் எழுத விரும்புவதில்லை. ஆப்கானிஸ்தானில் ஓடும் ச(ஹ)ரஸ்வதி நதியை, ஆரியர்களின் ரிக்வேதத்தைத்தான் துவக்கமாகக் கதைக்கிறார்கள். பறக்கும் வித்தை தெரிந்த லாவோசி சீனர்கள் யாரையும் வானில் பறக்கச்செய்யவில்லை. அவரும் எருமையில்தான் பயணம் செய்தார். ஆனால் ஆரியர்களின் தேவர்கள் வானில் வசிப்பார்கள்..பறப்பார்கள். மணப்பெண்ணைக் கடத்தாமலிருக்க மந்திரமென்பார்கள்.. துவக்கத்தில் தமிழனின் ஐந்து நிலக்கலாச்சாரத்தில் ஆரியமும் தேவர்களுமில்லை. சிந்து, மேற்கு-கிழக்கு கங்கை, பிரமபுத்திரா, நர்மதை, கிருஷ்ணா கலாச்சாரத்தில் நரபலி-மண்டை ஓட்டு கபாலிகள், மித்திரர், கணங்கள், பரதர், நாகர், கந்தர்வர், கிங்கரர், மூரர், சூதர், கங்கர், நிஷாதர், சாளுக்கியர், வேங்கியர், பறக்கும் யோகினிகள், யாகவெளியில் ரிஷிகளின் உறவில் பெண்களுக்கு பிறக்கும் அயோனிகள் இருந்தார்கள். நெடுங்காலமாக சூது, சோம-சுரா பான குடிப்பழக்கம், மத-வருண-சாதிய ஒடுக்குமுறை, திருட்டு, கொலை, கொள்ளை, யாகத்தீயில் உயிர்வதை, தீரா போர்க்களம், சதி, வறுமை, துன்பம், மாயாஜாலம், ஆயிரஆயிரமாய் கடவுள்கள் இவற்றை மட்டுமே அனுபவித்த மக்களின் வாழ்வில் பகுத்தறிவதன் மூலம் புரட்சி செய்து மகிழ்சியைத் தந்த நாத்திக புத்தர் பிற்காலத்தில் நகைப்புக்குள்ளானார். 1857-ல் மனுதர்மம் தடைசெய்யப்பட்ட பிறகும் நம் காலத்தில் தொடரும் மத-வருண-சாதிய ஒடுக்குமுறை-மூடத்தனம்-பெண்ணடிமைத்தனம்-உழைப்புச்சுரண்டலினால் ஏற்படும் வறுமை இவற்றை அகற்றிட பெரும் பாடுபட்ட பெரியார், அம்பேத்கர், கம்யுனிஸ்ட்கள் அவ்வப்போது நகைப்புக்குள்ளாகின் றனர். ***சாதி இரண்டொழிய வேறில்லை*** என்ற குறளுக்கு உரையெழுதுபவரும் கூட தன் சாதியிலியே பெண் பார்த்து தேவர்கள் மணப்பெண்ணைக் கடத்தாமலிருக்க லஜஹோம மந்திரங்களும், சப்தபதி சடங்கும் நடத்திக்கொண்டுதானிருக்கின்றனர். திருவள்ளுவரும் நகைக்கப்பட்டுக்கொணடுதானிருக்கிறார்..!"

-அருள்சந், திருச்சி, 27-07-2020